# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி



ஓவியம் : கிருஷ்ணமூர்த்தி

1 தேவடி தெரு

சென்னை 4

14

நவம்பர் 1971

30 காசு

# ஸமீக்ஷா

ம. இராஜாராம்

ஸமீக்ஷா 16-ம் இதழில் ஓவியத்தின் பங்கு முனைத்து நிற்கிறது. நான் ஏன் சித்திரம் வரைகிறேன்? (கவனிக்கவும்-நான் எப்படி சித்திரம் வரைகிறேன்—அல்ல) என்ற கே. ஸி. எஸ். பணிக்கரின் கட்டுரையும், அவரைப் பற்றிய கட்டுரையும், அவருடைய சித்திரங்கள் (வண்ணத்திலும், கருப்பு வெளுப்பிலும்) சிலவும், ஓவியர் விஸ்வநாதன் பாரீஸிலிருந்து எழுதிய கடிதங்களும், 'சொற்சித்திரங்களும்' பெரும்பான்மையான பக்கங்களை ஆக்ரமித்துக் கொள்கின்றன.

இவற்றைத் தவிர கவிதைகளும், சிறுகதைகளும், கட்டுரைகளும், புத்தக விமர்சனங்களும் அளவோடு நிறைந்துள்ளன.

'Collage' என்பதற்குத் தமிழில் ஏதேனும் வார்த்தைஇருக்கிறதா?மலையாளத்தில்அதற்கு வார்த்தை மிகவும் அழகான ஒரு வார்த்லதை உபயோகிக்கப்பட்டிருக்கிறது. அவ்வார்த்தையின் சிறப்பு, 'பங்களாதேஷ்' பற்றிய அந்தத் துணுக்குச் சேர்க்கைச்சித்திரத்திற்கு(சித்திரக் கூடல் என்று சொல்லலாமா?) இல்லை.இதைக் 'கேரள கௌமுதி'யிலிருந்து எடுத்து 'ஸமீக்ஷா'வில் வெளியிடுவதற்கு, சந்தர்ப்பம் என்பதைத் தவிர அதற்கு வேறு ஏதும் சிறப்பில்லை.

இருபத்தோரு வருஷங்களுக்கு முன்பு ஆரம்பிக்கப்பட்ட "நவஸாஹிதி" முதல் "ஸமீக்ஷா" வரை சொல்லப்பட்டிருக்கும் பக்கங்களைப் படித்தபோது எனக்குத் தமிழில் 'எழுத்து' முதல் 'கசடதபற'வரை நினைத்துப் பார்க்கத் தோன்றியது. (மணிக்கொடியைச் சேர்த்துக்கொள்ள வேண்டுமோ). புதிய தலைமுறை எழுத்தாளர்களின் வளர்ச்சிக்காக அவர்களுடைய படைப்புக்களைப் பிரசுரித்து உற்சாகமூட்டுவதே நவஸாஹிதியின் இலட்சியமாக இருந்ததாம். அதில் எழுதிய பலரும்-இடசேரி, எம். பி. பாலகோபாலன், வி. டி. குமாரன், கே. ஸுரேந்திரன் போன்றோர் இன்று கேரளத்தில் பெரிய எழுத்தாளர்கள். நவஸாஹிதி ஒரே ஒரு வருடமே வெளிவந்தது. நாலைந்து வருட இடைவெளிக்குப் பின் வந்த இன்னொரு பத்திரிகையின் மூலகர்த்தர்களும் 'நவஸாஹிதி'க்காரர்களே. இங்கும் பண நஷ்டம்தான்; நேரமின்மைதான். 'கோபுரம்' என்ற இப்பத்திரிகை கவிதைகளுக்கும் கவிஞர்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்ததாம். பஷீரின், 'பாத்துமாவின் ஆடு' இதில்தான் வெளிவந்தது. இப்பத்திரிகையும் ஒரு வருஷமே வெளிவந்திருக்கிறது. இன்னொரு ஐந்து வருடங்களுக்குப்பின் 'ஸமீக்ஷா' ஆரம்பிக்கப்பட்டது.

இந்தக் கட்டுரையில் நேரமின்மை, பணக்கஷ்டம் இவை தவிர, இலக்கியச் சூழ்நிலை, இப்பத்திரிகைகளின் இலக்கியத்தரம், இலக்கிய அடிப்படையில் உண்டான எதிர்ப்புக்கள் எதுவும் தெரியவில்லை. இன்னொரு முக்கியமான விஷயம்; இப்பத்திரிகைகள் யாவற்றையுமே திரும்பத் திரும்ப ஒரு மூன்று அல்லது நான்கு பேர்களே—அதே நபர்களே—ஆரம்பித்திருக்கிறார்கள். இதைப்பற்றி யோசித்துப் பார்க்கையில் தமிழில் புதிது புதிதாக இலக்கியப் பிரக்ஞையுற்றவர்கள் பிறந்து கொண்டு வருவதாக எனக்கு ஒரு பிரமை உண்டாகிறது.

'மலையாளச் சிறுகதை இலக்கியத்தில் நாலாந் தலைமுறை' என்ற செறமங்கலம் ராதாகிருஷ்ணனின் கட்டுரை சுவையான ஒன்று. முதல் தலைமுறை: மொழிப் பண்டிதர்களும், உயர் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுமாம். இரண்டாம் தலைமுறை: பெரும்பாலும் கம்யூனிஸ்டுகள் ஏற்றத்தாழ்வு, பட்டினி, நாட்டுப் பிரச்னைகள் இவைகளே இவர்களுடைய அடிப்படைக் கரு. பஷீர், உரூபு, எஸ். கே. பொற்றக்காட், காரூர் இவர்களும் இந்த அடிப்படையில் ஆரம்பித்து நிலை நின்றவர்களே. 'இரண்டாம் தலைமுறையினர் சாதாரண மக்களின் கண்ணீரைத் துடைக்கிற சாக்கில் தங்களுக்கு மார்க்கெட் தேடிக்கொண்டார்கள், என்கிறார் ஆசிரியர். 'இவர்களை இவர்களாக்கிய ஏழை ஜனங்கள் இன்றும் சாலையில் முழுப்பட்டினியும் அரைப்பட்டினியுமாகத்தான் நாட்களை ஓட்டிக்கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய எழுத்தால் ஏழைகளின் வாழ்வு சிறப்பதற்குப் பதில் அழியவே செய்தது' என்பது ஆசிரியரின் குற்றச்சாட்டு.

புதிய சிறு கதாசிரியர்களுக்கும் இச்சமுதாயக் கோடுகள் தெரிந்தே இருந்தன. அதோடு இரண்டாம் தலைமுறை எழுத்தாளர்களைப் பற்றியும் தெரிந்திருந்தது. இப் புதியவர்களுக்கு "அலைகள் கடலினுடையவை; ஆனால் கடலானது அலைகளுக்குச் சொந்தமில்லை." பூமி பூமியும், சூர்யன் சூர்யனும். சந்திரன் சந்திரனும், ஸஹஸ்ர கோடி நட்சத்திரங்களுமே யென்பதை இவர்கள் புரிந்து கொள்கிறார்கள். தானே ஒரு குற்றவாளி

ஃ காலாண்டுப் பத்திரிகை, மலையாளம்
எண்: 16.
ஆண்டுச் சந்தா- ரூ. 15,
தனிப்பிரதி- ரூ. 5.
பிரசுரகர்த்தர்: எம். கோவிந்தன்,
ஆசிரியர்கள்: எம். கோவிந்தன்,
ஏ, என். நம்பியார்,
77-B Harris Road, Madras-2

யாகிய மனிதன் எப்படி மற்றொரு குற்ற வாளியை இரட்சிக்க முடியும்? ஏற்றத் தாழ்வு, பட்டினி இவைகளுக்கு அப்பாற்பட்டது இவர்கள் பார்வை. சமூக உத்தாரணம் இவர்கள் தலைவலியல்ல. எல்லா சமூகப் பிரச்னைகளுக்கும் இலக்கியம் மூலம் தீர்வு கண்டுவிட வேண்டுமென்ற முட்டாள்தனம் இவர்களிடமில்லை. மற்றொருவன் விதைத்த கருவைத் தன்னுடையதாக ஏற்றுக்கொள்ளும் 'தியாகி'யையும் வேசியை மனைவியாக்கிக் கொள்ளும் புனருத்தாரணவாதியையும் சித்தரித்த இரண்டாம் தலைமுறையினர் இப்புதிய எழுத்தாளருக்கு இளப்பமானவர். மலையாளச் சிறுகதையைக் கபடம், சூது எனும் குகைகளிலிருந்து விடுதலைப் படுத்தியவர் இம் மூன்றாம் தலைமுறையினர். எம். டி. வாசுதேவன் நாயர், டி. பத்மநாபன், ஜயதேவன், மாதவிக்குட்டி, கோவிலன், என். வி. முகமது, பட்டத்துவிளை, இவர்கள் இந்தத் தலைமுறையைச் சேர்ந்தவர்கள். இவர்களுடைய எழுத்தில் புதுமையும், ஜீவனும் முனைத்து விளங்கியபோதிலும் இவர்கள் கையாண்ட விஷயங்களை நாலாந் தலைமுறையில் சேர்க்கவிடாமல் செய்கின்றன. இவர்களில் சிலர் அவ்வப்போது சில சோதனைகள் செய்ய முயன்றாலும் தங்களைச் சுற்றியிருந்த பந்தங்களிலிருந்து இவர்களால் விடுபட முடியவில்லை.

புதிய மலையாளச் சிறுகதையைத் துவக்கம் செய்தவர்களில் முக்யமானவர் காக்கநாடன் என்பது ஆசிரியரின் நம்பிக்கை. அங்கும் புதிய எழுத்தாளர்களைப் பற்றி— 'இவர்கள் மேற்கு நோக்கிகள்; ஸார்த்ரெ, பெக்கெட், காமு முதலியோரின் கடனாளிகள்' என்ற குற்றச்சாட்டுகள் நீளுவதை இக்கட்டுரை தெரிவிக்கிறது. சுவாரஸ்யமான ஓர் analysis இது. ஆனால் அடிப்படையில் புதிய தலைமுறை எழுத்தாளர்களைக் காக்கும் தீவிரம் ஒலிக்கிறது.

ஸுரேஷ் கொஹ்லியின் ஸாஹித்ய அக்காடமி பற்றிய ஒரு கட்டுரை இருக்கிறது. காந்தி நூற்றாண்டுக் கமிட்டி, குருநானக் ஐந்நூற்றாண்டுக் கமிட்டி, விவேகானந்தர் நினைவு ட்ரஸ்ட் என்று அக்காடமி நேரத்தையும் விரயம் செய்வது குறித்து நொந்துகொள்கிறது இக் கட்டுரை. புஸ்தகத்தின் தரத்திற்காக அல்லாது எழுதியவரின் பிரபலத்திற்காகவே பரிசுகள் வழங்கப்படுவதாகத் தோன்றுகிறது' என்று கட்டுரையாளர் வேதனைப்படுகிறார். அரசாங்கத்தை விரோதித்துக் கொள்பவர்களுக்குச் சந்தர்ப்பமே இல்லையென்று நிராத் சௌத்ரியின் உதாரணத்தை எடுத்துக் காட்டுகிறார். 1956 முதல் வெளிவரும் அக்காடமியின் 'இந்தியன் லிட்டரேச்சர்' என்ற பத்திரிகையையும் விடவில்லை கொஹ்லி' அதில் வெளியாகும் உபயோகமற்ற, மூன்றாந்தரக் கட்டுரைகளைச் சாடியிருக்கிறார். 'முற்போக்கு எழுத்தாளர்களின் படைப்புக்களுக்கு இடம் கொடுத்தால் அநாவசியமான வாதப் பிரதிவாதங்களுக்கு வழி கோலியதாகுமென அகாடாமி பயப்படுகிறது. அதனால், என்றோ இறந்து போனவர்களும், இன்று எந்தவிதமான முக்கியத்துவம் இல்லாதவர்களுமான எழுத்தாளர்களின் படைப்புக்களுமே பிரசுரிக்கப்படுகின்றன என்கிறார் கட்டுரையாசிரியர். ஆதாரபூர்வமான இக்கட்டுரை, ஸாஹித்ய அக்காடமி ஏற்றுக்கொண்டுள்ள அத்தனை மொழிகளிலும் மொழி பெயர்க்கப்படவேண்டிய ஒன்று. மலையாளத்தில் கே. உன்னிகிருஷ்ணன் சிறப்பாக மொழி பெயர்த்திருக்கிறார்.

கே. ஸி. எஸ். பணிக்கரைப் பற்றிய வழக்கம்போன்ற ஒரு கட்டுரையும், சாதாரணமான அவருடைய சொந்தக் கட்டுரையும், சிறப்பான அவரது சித்திரங்களும் அடுத்து இடம் பெற்றுள்ளன. சில கருப்பு-வெளுப்பு ஓவியங்களைக் காண்கையில், அவற்றை மூல வண்ணத்தில் கண்டால் மட்டுமே உண்மைச் சிறப்பை உணர முடியுமென்ற ஆற்றாமை உண்டாகிறது.

இதில் வெளியாகியிருக்கும் நான்கு சிறுகதைகளிலும் ஓர் ஒற்றுமை மாயத்துவம் (Mysticism), அதீதப் பிரமை (Fantasy) என்பனவே இவற்றை சாதாரணச் சிறுகதைகளிலிருந்து சற்று வேறுபடுத்துகின்றன. 'தீயால் விளையாடிய ஒருவன், கதையில், அரை நிக்கர் அவிழ்ந்து விழுகிற அவனுடைய வயதில் அவன் அப்பா, காலையில் தன் வழக்கப்படி அடுத்த வீட்டுக்காரர் முகத்தில் தான் விழிக்கவேண்டுமெனக் காத்திருக்கிறார். அடுத்த வீட்டுக்காரரோ இரவே வேற்றூர் சென்றவர் அங்கேயே இறந்து விட்டிருக்கிறார். அப்பா காத்திருக்கிறார். அவன் பள்ளிப் படிப்பு முடிந்து, வேலை தேடிப் பம்பாய் சென்று, காதலித்து மணந்து, குழந்தை பெற்று (அவளுக்கு நடாஷா என்றுபெயரிட்டு மனைவிக்கு டால்ஸ்டாயிடம் பைத்தியமானதால்), தாயார் இறந்தபின் தன் கிராமத்திற்குத் திரும்பி வரும்போதும் அப்பா ஜன்னல் பக்கத்தில் அடுத்த வீட்டுக்காரர் முகதரிசனத்திற்காகக் காத்திருக்கிறார். இக்கதையில் அதீதமான இக்கதாநிலை ஒரு பிரமையைக் கொடுக்கிறது. ஆனால் வெகு கவனமாக, மனமறிந்து, வெளிப்படையாக இதற்கு முக்யத்துவம் கொடுக்காமல், கதையை நேராகவும் பரபரப்பின்றியும் நடத்திச் செல்வதன் மூலம் இந்த அதீத நிலைக்கு இன்னும் கனத்தைக் கூட்டியிருக்கிறார் எம். முகுந்தன்.

"உடல் உள்ளவர்; உடல் இல்லாதவர்" என்ற அச்சுதன் கூடலூரின் கதையைப் படிக்க ஆரம்பித்துக் கொஞ்சநேரம், ஒரு தர

மான கதையைப் படித்துக்கொண்டிருக்கிறோம் என்ற நம்பிக்கையும், மகிழ்ச்சியும் நம்மை ஆட்கொள்கின்றன. ஆனால் போகப் போக Sentimental delineation அமிதமாகி விடுகிறது.

குற்றவாளிகளைச் சந்திக்க வேண்டுமென்று வேலியைக் கடந்து உள்ளே வந்தவனை வார்டர் வரவேற்றுக் கைக்கடிகாரத்தைக் கழற்றி வைத்துவிடச் சொல்கிறான். வேலியோரமாக இருவரும் நடக்கிறார்கள். அவனுடைய எதிர்பார்ப்புக்களிலும், நினைப்பின் நீச்சலிலும், தன்னிழப்புக்களிலும் :நேரமெனும் சக்தி கரைந்து அர்த்தமற்றதாகிறது. நினைப்பில் தன்னைப் பல்லாண்டுகளின் சிறு வட்டத்துக்குள் அடைத்துக்கொண்டு, வார்டரின் பிடிக்குள் பயங்கரமான மனவடிமையாகிக் கட்டுப்பட்டு, யாரையும் சந்திக்காமல் வேலியைத் தாண்டி வெளியே வருகிறான். ஆனந்த் எழுதிய 'வேலி' என்னும் இக் கதையின்கரு'மனப்பிராந்தி (hallucination). இதில் 'நேரம்' என்பதன் அர்த்தமின்மை (அல்லது அர்த்தம்?) மிகப் பிரயாசையுடன் வெளிக் கொணரப்பட்டிருக்கிறது.

பி. கே. வி. ராஜாவின் 'கருப்புத் தோட்டை' மிகவும் நவீனமானது. ஆனால் ம. இராஜாராமின் 'சிதறல்கள்' கதை(?)யைப் படித்திருப்பவர்களுக்கு இதில் புதிதாக ஏதுமில்லை.

இந்தக் கதைகளின் பாத்திரங்கள் எல்லோருமே சற்று வித்யாசமானவர்கள்—தப்பான நேரங்களில் தப்பான நினைப்புக்களால் ஆக்ரமிக்கப் படுபவர்கள். ஸ்பானிஷ் கவிதைகளைப் பற்றியும், டால்ஸ்டாயின் நடாஷாவைப் பற்றியும் தெரிந்து வைத்திருப்பவர்கள். விசித்திரம் என்பதற்காக விசித்திரமாக இருப்பவர்கள்; சிந்திப்பவர்கள். இன்றைய மலையாளச் சிறுகதையின் உறுதியான representation என்று இக்கதைகளைச் சொல்ல முடியாதாயினும், நவீனப் போக்கின் உதாரணங்கள் இவை என ஒப்புக் கொள்ளலாம்.

ஹங்கேரியன் கதையை (ஸ்நேகம்—டிம் போர் டெரி) டாக்டர் கே.ஸி. பத்மாவதி மொழி பெயர்த்திருக்கிறார். இயல்பான மொழி பெயர்ப்பில் மூலத்தின் பரபரப்பற்ற நடை தெளிவாகிறது. இதிலும் time element-ம், ஏழுவருடச் சிறை வாசத்திற்குப்பின் வீடு திரும்பும் ஒருவனின் மனநிலைகளை subdue செய்து subnormal ஆக விவரிக்கிற புதுமையும் காணப்படுகின்றன.

சந்தமும், எதுகைமோனைகளும் நிறைந்த இலக்கியத்தரமான, இலக்கணம் வழுவாத கவிதைகள் சில பிரசுரமாயிருக்கின்றன. இவைகளைப் பற்றிச் சொல்ல விசேஷமாக ஏதுமில்லை.

அஷீஸ் ஸன்யாவின் பெங்காளிக் கவிதைகள் சிலவற்றைத் திறமையோடு மொழி பெயர்த்திருக்கிறார் டி. விஜயசந்திரன். கடினமற்ற எளிய வார்த்தைகளால் ஆன மொழி பெயர்ப்புக்கள். மூலத்தின் சிறப்பையும் உணர்த்தத் தவறவில்லை.

காபோர் காரேயின் கவிதைகளை ஸச்சிதானந்தன் மொழி பெயர்த்திருக்கிறார். காரே இந்தியாவுக்கு விஜயம் செய்தபோது 1970-ல் எழுதிய இக்கவிதைகளில் காஞ்சீபுரம் தேர் பற்றிய ஒரு கவிதையும், கல்கத்தா ரிக்ஷாக்காரனைப் பாடும் ஒரு கவிதையும் உள்ளன. மொழிபெயர்ப்பும் கவிதைநடையிலேயே சிறப்புற அமைந்திருப்பதால், மலையாளக் கவிதைகளைப் படிப்பது போலிருக்கிறதே தவிர, மொழிபெயர்ப்பாகத் தெரியவில்லை.

இக்கவிதைகளையெல்லாம் விட, நம் மனத்தைக் கவர்ந்து பதிகிற ஒரு புதுக் கவிதை 'கழுகுக்' அக்பர் கக்கெட்டில் எழுதிய இக் கவிதையின் தமிழாக்கம் இதோ:

காற்று
தெருவில் இருளின் மழை
லா இலாஹ இல்லல்லா
சவமஞ்சம் நகருகிறது.
மசூதியில் முக்ரியின் சவ அடக்கம்
பெட்ரோமாக்ஸின் வெளிச்சம்
கண்களில் கலக்கம், வேதனை,
"நான் எனது சகோதரனைப் போலவே
கருதினேன்"
ஆகாயத்தில் வெடித்துச் சிதறல்
காற்று சீறும் சப்தம்
"மைமூனே, என்னை மன்னி!"
விசும்பல்; முக்ரியின் கறைபடிந்த பற்கள்.
வாசல் திறந்து நடந்தகலும் உருவம்.
லா இலாஹ இல்லல்லா
சவ மஞ்சம் அகலுகிறது, வெளிச்சம்
அகலுகிறது.
கண்களில் இருட்டு. அவள் கதவைச்
சாத்தித் தாழிட்டாள்.
அப்போது இசாஹ் பாங் முழங்கியது.

ஓவியர் விஸ்வநாதன் பாரீஸிலிருந்து 1968 அக்டோபர் முதல், 1970 டிஸம்பருக்குள் எழுதிய ஆறுகடிதங்கள்: ஒரு ஓவியனின் தவிப்பு—தன் பிறப்பிடத்தையும், தன் நண்பர்களையும் மனத்தளவில் பிரிய இயலாமையும்—ஆனால் மெல்ல மெல்ல பாரீஸில் கரைந்து

(தொடர்ச்சி 14ஆம் பக்கம்)

# கேசவ் எம். ஏ.,

இந்துமதி

கேசவ் எம். ஏ., என் பெயர்தான். ஆனல் நண்பர்களுக்கு நான் ஒரு இண்ட்ராவர்ட், பெக்யூலியர் ஃபெல்லோ. இது அவர்கள் நேரிடையாகவே என்னிடம்சொல்லுவது. நான் இல்லாத சமயத்தில், அவர்கள் சேர்ந்திருக்கும்போது, அதாவது முகத்திற்கு மறைவாக என்னைக் குறிப்பிடுவது, 'இம்பெஸைல்.'

மேலே இருப்பதைப்படித்துவிட்டுஅப்நார்மல் என்றோ, க்ரான்க் என்றோ நினைத்து விடாதீர்கள். அது மாதிரி ஒன்றுமில்லை. உங்களைப் போலவே சிரிப்பேன், பார்ப்பேன், சாப்பிடுவேன்...ஆனல் ஒன்றில் மட்டும் வித்யாசம். ஹோட்டலில் சாப்பிடும்போது (பாச்சலர் தான்) எதையாவதைப்பற்றி எண்ணிக்கொண்டேயிருப்பேன். சர்வர் ரசத்திற்குப் பதிலாக மோரை ஊற்றிவிட்டு போயிருப்பான். சர்வர்கள் எல்லோரும் என்னை ஒரு மாதிரியாகத்தான் பார்ப்பார்கள். அவர்களுக்குத்தான் என்னைப்பற்றி, என்னைவிட நன்கு தெரியும் என்ற எண்ணம்.

பஸ் ஸ்டாண்டில் நின்று கொண்டிருக்கும் போது, சுவர்களில் ஒட்டியிருக்கும் சினிமா போஸ்டர்களைப் பார்க்கும்போது, எப்போதோ, எங்கோ அடித்த விட் நினைவுக்கு வரும். நானே சிரித்துக் கொள்வேன். திடீரென்று அப்போது ஒரு குரல் கேட்கும். பார்த்தால் கும்பலில் பக்கத்தில் நின்று கொண்டிருக்கும் பெண் முகத்தைச் சுருக்கிக் கொண்டு, கடு கடுப்புடன் ஒரு ரைட்டர்ன் அடிப்பாள். அந்தப் பெண்ணுக்கு நான் அவளைப் பார்த்து சிரித்ததாக நினைப்பு; அதற்கு நான் என்ன பண்ணட்டும்? அதற்காகச்சிரிக்காமல் இருக்க முடியுமா? நான் பாட்டிற்குச் சிரித்துக் கொள்வேன்.

இதேபோல்தான் பஸ்ஸில் போகும் போது மனத்துக்குள் காயத்ரி சொல்லிக் கொண்டேயிருப்பேன். பக்கத்தில் உட்கார்ந்திருப்பவருக்கு முதலிலே எப்படிப்பட்ட சப்தம் இது, எங்கிருந்து வருகிறது என்று தெரியாது. ஆனல் வண்டியை 'நிப்பாட்டி' டிக்கட்கொடுக்கிறனே, அப்போது தெரிந்துவிடும். அவர் என்னை விநோதமாகப் பார்ப்பார். என்னடா டீஸன்டா டிரெஸ் பண்ணிண்டிருக்கான், என்னமோ முணுமுணுத்துக்கொண்டு வர்ரான்னுதானே தோணும். அதற்கு நான் என்ன பண்ணுவது. ஒரு வேளை இதனல்தான் நான் ஒரு பெக்யூலியர் ஃபெல்லோ என்று நண்பர்கள் சொல்லுகிறர்களோ?

எனக்கு எப்போதும்காமன்மாஸிடமிருந்து வேறுபட்டிருக்கணும்னு ஆசை. எல்லோருக்கும் ரைட்டுன்னுபட்டுதுன்னு அதைத் தப்பாக்கி பார்ப்பதில்தான் ப்ளஷர். எல்லோருக்கும் தப்புன்னு பட்டுதுன்னு எனக்கு அதை சரின்னு காண்பிக்க வேண்டும் என்று தோன்றும். 'ஆர்குமெண்ட் ஃபார் ஆர்குமெண்ட் சேக்' எனக்கு ரொம்பவும் பிடிக்கும். அதனலே நண்பர்கள் எனக்கு 'சாயர்' என்று பெயர் வைத்துள்ளனர். என்ன புரியவில்லையா? உண்மையிலேயே புரியவில்லையா? அப்புறம் உங்கள் கழுத்தையே...

டான் ஜுவான் இல்லாட்டியும் நான் சார்மிங்தான். நண்பர்கள் எல்லோரும் சேர்ந்து, 'டேய், நீ எவ்வளவு சார்மிங்கா இருக்கே தெரியுமா. ரியலி லவ்லி டு லுக் அட் (ரு)' என்பார்கள். எல். எஸ். டி. மாத்திரை சாப்பிடாமலேயே கிர்ர்ன்னு இருக்கும். பின்னே 'சைட் போஸ்லே நீ சிவாஜிபோல இருக்கே, கண் பீட்டர் ஓடுல் போல இருக்குன்னு. கமென்ட் அடிச்சு இண்டர்நேஷனல் ஸ்டார் ஆக்கின எப்படியிருக்கும்?

உண்மையிலே சார், எல்லோரும் தூக்கி விட்டாங்க. பிலிம் ஃபேர், ஸ்கிரீன், தமிழ் சினிமா பத்திரிகைகள் எல்லாவற்றையும் பார்க்க ஆரம்பிச்சேன். படிக்க ஆரம்பிச்சேன்; வேரியஸ் போஸ்லே போட்டோக்கள் எடுத்துண்டேன். வாரத்திற்கு ஒருதரம் கம்பெனிகளுக்கு, ஸ்டுடியோக்களுக்கு போக ஆரம்பிச்சேன். புதுமுகம் கேட்ட கம்பெனிகளுக்கு போட்டோ ஆல்பத்தையே அனுப்பிச்சேன். ஒவ்வொருதடவையும் போட்டோ அனுப்பறச்சே, லீடிங் சினி ஸ்டாரோடே டூயட் பாடுவது போலவும், காஷ்மீர் போவது போலவும், ஜேம்ஸ் பாண்ட்போலவந்து ஜுடோ ஃபைட் கொடுத்து கதாநாயகியைக் காப்பாற்றுவது போலவும் கனவு கண்டு, கனவு கண்டு......

இன்றைய என் நிலை?

என் கூட படித்தவன் எல்லாம் ஜாலியாய் (ஜாலியாய்னு அவங்க சொல்லித்தான் சொல்றேன்) கலியாணம் பண்ணிண்டு இருக்கான்கள்.

நாராயணன், ராகவன், சேகர், நான் எல்லோரும் ஒன்றுகத்தான் காலேஜுக்குப் போவோம், வருவோம். நாராயணன் 'நான் 'ஆப்டிக்ஸ்'லே ரிசர்ச் பண்ணப்போறே'ன்னு சொல்லிண்டேருந்தான். ராகவன் 'இன் ஆர்கானிக்லே' பண்ணப்போறேன்னு சொல்லிண்டிருந்தான். சேகர் 'நான்டோபாலஜிலே'ன்னு சொல்லிண்டிருந்தான்.

ஆனல் இன்றைக்கு நாராயணன் ஸ்டேட் பாங்கிலே ஆபீசர், ராகவன் எல். ஐ. சி லே ஆபீசர், சேகர் ஐ. ஏ. எஸ்.

'ஏண்டா நீங்கெல்லாம் ரிசர்ச் பண்ணப் போறேன்னு சொன்னீங்களே, என்னடா ஆச்சு உங்க ரிசர்ச்'னு கேட்டா, 'எவன்டா ரிசர்சுக்கு அதிக சம்பளம் கொடுக்கருன்? சயின்டிஸ்டுகளுக்கு வேண்டிய என்விரான் மென்ட் இந்தியாவிலே இல்லையாம். நாம மண்டையை உடைச்சுண்டு ரிசர்ச்பண்ணனும்; ஸ்காலர்ஷிப் எப்ப வரும்னு காத்திண்டிருக்க ணும், ஒண்ணும் தெரியாதவன் ஏதோ கேள்வி கேட்கணும், புரியாத அரசியல்வாதிக்கு விளக் கணும், போடா ரிசர்ச்சும் ஆச்சு மண்ணுங்கட்டி யும் ஆச்சு. இப்ப பார், கைநிறைய சம்பளம். பெரிய இடத்து மாமனர். சொசைடியிலே ஒரு ஸ்டேடஸ்...' இப்படி என்னென்னமோவெல் லாம் பேசருன்கள்.

எம். எஸ்ஸி படிச்சவன் ஸ்டேட்பாங்கிலே ஆபிசர், கெமிஸ்ட்ரி படிச்சவன் எல்.ஐ.ஸிலே, ஆபிசர். இன்னெருத்தன் ஐ. ஏ. எஸ். கேட் டாக்க 'எக்ஸிக்யூட்டிவ் டாலன்ட்' டாம். ஏன் சார், எக்ஸிக்யூடிவ் டாலன்ட்னு என்னசார்?

பார்த்தீர்களா, மறந்தே போய்விட்டது. அவங்களோட படிச்ச நான் ஒரு எம். ஏ. எகனுமிக்ஸ் கீன்ஸின் மேக்ரோ எகனுமிக் அப் ரோச், ஷும்பீட்டரின் இன்னுேவேஷன்தியரி, மார்க்ஸின் எக்ஸ்ப்ளாய்ட்டேஷன் தியரி, ஹெராடின் க்ரோத் தியரி எல்லாவற்றையும் படிச்சவன்.

---

## எரிச்சல்

மணிக் கணக்காய்,
சாக்கடையில் விழுந்து குளிக்கட்டும்,
காக்கை—கவலையில்லை.
குளித்த பின்னல்,
கொடி மேலேறி,
ஈர 'மனைவி—ஜாகட்டில்' தாவிக்
குளிர்காயும் நினைப்பில்,
குஷியாய் படபடத்தால்,
கோபம் மட்டுமா வரும் எனக்கு?
பொறுமையும் கூடக் கத்தும்.

—எஸ். வைதீஸ்வரன்

ஆனல் அவற்றைப் படிக்கும் போதெல் லாம் சிவாஜியும், பீட்டர் ஓடூலும்தான் வரு வார்கள். நண்பர்களுக்கெல்லாம் ஆச்சர்ய மாய் இருக்கும். எப்படிடா எகனுமிக்ஸ் புக்கை ஒரு மணி நேரம் படிக்கிருன்னு. பாவம் அவர் களுக்கென்ன தெரியும் நான் ரிகார்டை ஸ்மாஷ் பண்ணப் போறேன்னு நினைச்சிண்டி ருந்தாங்க. ஆனல் பேப்பர்லே நம்பர் வராத தைப் பார்த்ததும் அப்படியே ஒரு கொடூர மானஷாக். எனக்கில்லை. அவர்களுக்கு.

'டேய் நாங்க எதிர்பார்க்கவேயில்லைடா. எனக்கு பாஸ் ஆகும்னு ஹோப்பே இல்லை. ஆனு பாஸ் போட்டிருக்கான், பரிட்சைஷ சுத்த காம்பிள்டா, ஆர்ட்ஸ் சப்ஜெக்ட் எல்லாமே இப்படிதான்; என்னமோ கையைக் கடிப்பது போல ஒண்ணு, ரண்டு பஸ்ட்கிளாஸ் தர்ரான்' இவைகள்தான் முடிவு வெளிவந்த அன் றைக்கு வந்த கமென்ட்ஸ். உண்மையிலே என் நண்பர்களைப் பார்க்க வேடிக்கையாய் இருந்தது. யார் யாரை ஏமாத்தருன்கள்?

எக்ஸ்க்யூஸ்மீ, நான் உங்களை மிகவும் போர் அடிச்சிட்டேன். இப்போ நான் செக் ரட்டேரியட்லே ஃபூட் (food) டிபார்ட் மென்ட்லே ஒரு அஸிஸ்டென்ட்.

ரொம்பநாளாய் ஒரு ஐடியலிஸ்டாய்த்தான் இருந்தேன். நிச்சயம் ஒருவன்வீடுதேடிவந்து வேலை தரப்போகிருன்னு நம்பிக்கை. நூறு சதவிகிதம் மிகாபரிஸம். எம். ஏ., படிச்சுட்டு பி. ஏ., ஸ்டான்டர்ட் எம். பி. எஸ். ஸி. பரிட்சைஷ எழுதி பி. ஏ., கிராஜுவேட்டுக்குப் போட்டியா வரவேண்டாம் (!) என்றுதான் இருந்தேன். அப்புறம் பார்த்தாதான் தெரிந் தது, பி. ஏ., பாஸ் பண்ணவன் எஸ். எஸ். எல். சியோட போட்டி போட்டுக் கொண்டு வேலைக்குப் போருன்னு. நானும் போட்டி யில் நுழைந்து வந்துவிட்டேன்.

இப்போ நான் ஒரு பக்கா ஸ்டேட் கவர்ன் மென்ட் எம்ப்ளாயி. அப்படீன்னு என்னென்னு கேட்கிறீர்களா? வெற்றிலைப் பாக்கு, புகை யிலை, மூக்குப் பொடி (திருவல்லிக்கேணி பிக்ஸ்ட்ரீட்லே வறுத்த சீவல், பன்னீர் புகை யிலை கொடுக்கிருன் பாருங்கோ) சாதாரண பேன்ட், எக்ஸ்ட்ரா ரீடிங் பண்ணணம்னு ஆசையே தோன்ருத நிலை, கான்டீனுக்குப் போய் டீ குடித்துவிட்டு, வார நாட்களில் ஏதா வது சினிமாவுக்குப் போவது இப்படி... நல்ல வேளை இன்னும் பி ஃஎப் லோன் வாங்கவில்லை.

இந்த வேலைகிடைத்ததில் எனக்கு ரொம் பவும் சந்தோஷம். பிடித்த வேலை வேண்டும் என்றுகேட்க இந்தியா என்ன அமெரிக்காவா? போஸ்ட் ஆபீஸ் என்ற பெயரிலே, இடிஞ்ச கட்டிடத்திலே, மழைக்காலத்திலே ஒரு இருட் டறைக்குள் இருக்கிருல்ப்போ இருக்கிற

இடங்களில் இரண்டு பதினைந்து பைசா ஸ்டாம்ப், நாலு கார்ட், ஒரு மணியார்டர் பார்ஃம்னு, மூன்று தடவை எண்ணிக் கொடுக்கிற வேலை இல்லை என்று நினைக்கும் போது என்னுடைய வேலை ரியலி வொன்டர்ஃபுல் தான்.

உடைத்த கோதுமை விலை எவ்வளவு, உடைக்காத கோதுமை எவ்வளவு, மரிக்கன் மாவுக்கும், மைதா மாவுக்கும் உள்ள வித்யாசம், லெட்டர் டு த எடிட்டர் காலத்திலே கன்ட்ரோலைப்பற்றி எவன் என்ன எழுதியிருக்கான் என்று பார்க்கிற வேலைகளைச் செய்வதில் என்ன ப்ளஷர் தெரியுமா. தப்பாக ஏதாவது டிராஃப்ட் போட்டுவிட்டோம் என்று கவலையே படவேண்டாம். எந்த டிராஃப்ட்டும் ஒரிஜனல் பார்மிலே போனது கிடையாது. பெரிய சென்டன்ஸா எழுதியிருந்தா சின்ன சென்டன்ஸா வெட்டப்பட்டிருக்கும். சின்ன சென்டன்ஸா இருந்தா நீட்டப்பட்டிருக்கும். அப்புறம் கவலை ஏன்!

நாராயணனுக்குத்தான் என்னைப் பார்த்தால் ரொம்பவும் வருத்தமாய் இருக்கிறதாம். நான் வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்கிறேனாம். நன்ருய்ப் படித்திருந்தால் முன்னுக்கு வந்திருக்கலாமாம். ஆனாலும்அவன் உடம்பை அலட்டிக் கொள்கிருன். அழகிய மனைவி, நல்ல கர்நாடக சங்கீதம், இனிய சூழ்நிலை நிறைந்த வாழ்க்கை இவையெல்லாம் ஒரு பேஸிக் நீட்ஸ் ஆப்லைஃப் என்று சொல்ருன். (எங்கு படிச்சானோ தெரியவில்லை). திடீர், திடீரென்றுரூமிற்கு வந்து சாப்பிடுவதற்கு வீட்டிற்கு அழைத்துக் கொண்டுபோய் இப்படித்தான்'செர்மன்'செய்வான். இப்படிஅழைத்துக் கொண்டுபோய் மறைமுகமாக என்னை இடித்துக் காட்டுகிருனோ என்று இருக்கும். ஆனால் நான் அதையெல்லாம் கண்டு கொள்வதில்லை. காலையில் எழுந்ததும், பல்தேய்த்து, காப்பி குடித்துவிட்டு, லாட்ஜ் காரிடாரிலே முண்டா பனியனுடன் எலிவேடட் பொஸிஷன்லே நின்று கொண்டு ஹிந்து படிப்பது எவ்வளவு bliss தெரியுமா? இதெல்லாம் அவனுக்கு எங்கே தெரியப்போகிறது?

லைஃப் இப்படித்தான் மாமூலாகப் போய்க் கொண்டிருந்தது. நானும், சூபரின்டென்டென்டும் அன்று பேசிக் கொண்டிருந்தோம். நம்மடிபார்ட்மென்ட்டுக்கு ஒரு லேடி வர்ராங்க என்ருர். நியூ ரெக்ரூட்டான்னு கேட்டதற்கு ட்ரான்ஸ்ஃவர் என்ருர்.

லேடி கான்டிடேட் வந்தபிறகு டிபார்ட்மென்ட்டில் ஐடியல் சேன்ஜ். அமெரிக்கன் வே ஆஃப் இன்ட்ரொடக்ஷன். மிடில் ஏஜஸ் ஷிவல்ரி சிலநாட்களுக்கு நிலவியது. இதிலே எனக்கு ஒரு சோதனை. என்னுடைய வலப்பக்கம் மிஸ். லதாவுக்கு சீட். ஒரு பி. ஏ., லிட்டரேச்சர், சார்மிங், சர்வதேச புத்தழகு—விவித பாரதி வர்த்தக ஒலிபரப்பில் சினிமா நடிகை கூறுகிருரே— அதைப்போல். சந்தேகங்கள் கேட்க விரும்பும் சமயங்களில் தலையை இடது பக்கம் சாய்த்துக் கொண்டு, இனிமையான குரலில், நெருக்கமான இடைவெளியில், இதற்கு என்ன எழுதலாம். அதற்கு என்ன எழுதலாம்......

நீங்கள் என்னதான் சொல்லுங்கோ, இந்தஉலகம்இருக்கே, அது விவஸ்தை கெட்டது சார். கடவுள்;நாக்குன்னு கொடுத்திருக்கார்ளு அதைவச்சிண்டு கடவுளை துதிக்கப்பட்ாது? அதான் கிடையாது. ஏதோ பாட்டிமார்கள் சொன்ளு சாதாரணமாய் விட்டுவிடலாம். படிச்சவனே சொன்ளு? மிஸ். லதாவைப் பற்றிய செய்திகள்...ஏதோ நாலு பேரை ஏமாற்றி விட்டாளாம்...

ஆபீஸ் வேலை நெருக்கத்தை உண்டாக்கியது. மாலை சேர்ந்து செல்வது, காப்பி குடிப்பது எல்லாம் இப்போது சர்வசாதாரணம். வருகின்ற ஞாயிற்றுக்கிழமை நாங்கள்மகாபலிபுரம் போகிருேம்.

ஒரு பெண் தைரியமாக ஒரு ஆணுடன் வரவேண்டுமானல் உண்மையில்அந்தப்பெண் எவ்வளவுசொபிஸ்டிகேடட்டாக இருக்கணும். இது தெரியாமல் பேசருன்கள்.

பஞ்சபாண்டவர் ரதத்திற்குப் போகும் வழியில் ஒரு காட்டேஜ் போன்ற கடையில் 'பாண்டா' குடித்தோம். பிறகு எதிரில் இருந்த சவுக்குத் தோப்பிற்குள் சென்று அமர்ந்தோம். பேச்சு எங்கெல்லாமோ சென்று புஸ்தகத்தில் வந்து நின்றது.

## அபிநா

நான்

பழுத்திருந்த போது

பழங்கடிக்க வராமல்

உளுத்துவிட்டதும்

புழுப் பொறுக்க

ஓடிவரும்

மனங்கொத்தி

நீ

—கல்யாண்ஜி

---

நான் கவுலின் அன்டோல்ட் ஸ்டோரி நன்ருய் இருந்தது என்றேன். அவள் மாமின் கேக்அன்ட் ஏல் நன்ருய் இருந்தது. என்ருள்.

நான் மைக்கேல் ப்ரீஷரின் சக்செஷன் இன் இன்டியா நன்ருய் இருந்தது என்றேன்.

அவள் கிரானினின் ஸ்டார்ஸ் லுக் டவுன் நன்ருய் இருந்தது என்ருள்.

நான் ரஸ்ஸலின் ஆட்டோபயோகிரபி நன்ருய் இருந்தது என்றேன்.

அவள் கிரீனின் கமீடியன்ஸ் நன்ருய் இருந்தது என்ருள்.

நீங்கள் நாவலே படிப்பது இல்லே போலி ருக்கிறதே என்ருள்.

நீங்கள் நாவலேத் தவிர வேறு ஏதும் படிப்பதில்லே போலிருக்கிறதே என்றேன்.

அவளும்,

நானும்

...என்று சிரித்தோம். (புள்ளி இட்ட இடங்களே நீங்களே நிரப்பிக் கொள்ளுங்கள்).

ஒரு நிமிட அமைதி.

உடம்பில் ஜில் என்றஉணர்ச்சி. லதாவின் கை என் கையை இடித்துக் கொண்டிருந்தது. முகத்தில் ஒரு மயக்கம். உடல் நெருக்கம் அதிகமாயிற்று. பிறகு பேசினது (சதைபிடிப்பான கதைகளேப் படித்திருக்கும் உங்கள் கற்பனேக்கு விடப்படுகிறது அவள் பேச்சு).

எனக்கு நினேவுக்கு வந்தது காஸினேவா செவன்டி, மார்சிலோ மேஸ்டிரியானி, ஹாங் காங் ஏர்ஹோஸ்டஸ் ஆஃப் அன் அவர்... கமான்...

எனக்கு எப்படி தைரியம் வந்ததோ தெரியவில்லே. அவளுக்குத் தோல்வி. உலுக்கிய உலுக்கலில் சுய நினேவுடன் பின்வாங்கினுள். சவுக்குத் தோப்பைவிட்டு வெளியே வந்தோம்.

மறுநாள் எதுவும் நடக்காதது போல் சென்றது. மாலே போகும் முன் என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுப்போனுள். மிகவும் சுருக்கமான கடிதம். ஆங்கிலத்தில் எழுதியிருந்தாள். 'ஐ கான் டாலரேட் யுவர் இன்னேஸன்ஸ்; நாட் யுவர் லாக்ஆஃப் மான்லினெஸ்.'

லாக் ஆஃப் மான்லினெஸ் என்று எழுதியிருக்காளே, அதற்கு என்ன அர்த்தம் சார். தன்னே மறந்து, சூழ்நிலேயை மறந்து, ஒரு வெறிச் செயலுக்கு தன்னே ஒருவன் பலி வாங்கவில்லேயே என்று வருத்தப்பட்டுக் கொண்டு, தன்னுடைய ஈகோ பாதிக்கப்பட்டு விட்டதே என்ற வெறிக் கோலத்தில் அவள் ஏதாவது சொன்னுல் நான் ஏன் கவலேப்பட வேண்டும்?

ஒரு பெண்ணே அவளுடைய வீக் முமென்டிலே, அவள் நார்மல் சென்ஸ்லே இல்லாதிருக்கும்போது அட்வான்ட்டேஜ் எடுத்துகொண்டு செட்யூஸ் பண்றதுதான் மான்லினெஸ்ஸா? நான் சொல்றது உங்களுக்கு பெக்யூலியராய்த் தானே இருக்கிறது.

அப்பாடா, இப்போஒருரிலீஃப். மிஸ் லதா மிஸஸ் ஆகி வேலேயை ராஜிநாமா செய்து விட்டு போய்விட்டாள்.

அரை குறையாய் காதில் விழுந்ததை வைத்துக் கொண்டு என் நண்பர்கள் மறைமுகமாக எனக்காக வருத்தப்படுகிருர்கள். பாவம்.

அப்பாடா, டேபிளுக்கு அடியில் இடது கை கட்டைவிரலுக்கும், ஆள்காட்டி விரலுக்கும் இடையே பொடிடப்பாவைக் கொடுத்துக் கொண்டு ஒரு சிட்டிகைப் பொடியை எவ்வளவு நிதானமாய் போடமுடிகிறது. உண்மையிலேயே சார், லேஃப் இப்போ ரொம்பவும் ப்ளசென்டாகப் போகிறது. ●

## யெதிரெதிர் உலகங்கள்

கண்ணிமையாக் கால்தோயாத் தேவர்
நாட்டில்
திரிசங்கைப் போகவிட மாட்டேனென்று
ஒரு முட்டாள் சொன்னது பேராபத்தாச்சு.

தன்னுளேத் திருப்பியதும் விஸ்வாமித்ரன்
கொதித்தெழுந்தான். பிரம்மாவுக் கெதிர்ப்
படைப்புத்
தான் செய்வேன் என்று சொல்லி ஆரம்பித்
தான்

கண்ணிமையாக் கால்தோயாத்தேவரெல்லாம்
ஓடிவந்தார் கடவுளுடன். வேண்டாமென்று
முனிவர்களில் மாமணியைக் கெஞ்சிக் கேட்
டார்.

சினம் தணிந்தான் தவஞானி. ஆனுல்அந்தக்
கணம் மட்டும் படைத்தவைகள் உலகில்
என்றும்
இருந்துவர வேண்டுமென்ருன். வரமும்
பெற்ருன்.

அன்றுமுதல் பிரம்மாவும் விஸ்வாமித்ர
மாமுனியும் படைத்தவைகள் அடுத்தடுத்து
வாழ்ந்துவர வழக்காச்சு. எடுத்துக்காட்டு:

மயிலுக்கு வான்கோழி புலிக்குப் பூனே
குதிரைக்குக் கழுதை குயிலுக்குக் காக்கை
கவிஞர்களுக் கெந்நாளும் பண்டிட் ஜீக்கள்.

—ஞானக்கூத்தன்

# அழவேண்டாம்; வாயை மூடிக் கொண்டால் போதும்

**அசோகமித்திரன்**

1. "இவன் யாருய்யா, இந்திரா பார்த்தசாரதிக்கு அடியாளா? வாயா? என் ரிஷி மூலம் கதைக்குத் தினமணி கதிர் எழுதியபோது இவன் எங்கேய்யா போயிருந்தான்? புளியம் பழம் பொறுக்கப் போயிருந்தானா? இப்போ வரிஞ்சு வரிஞ்சு எழுதறானே?" என்று ஜெயகாந்தன் சென்னையில் தன்னைப்பற்றிச் சீறியதாகச் 'சென்னையிலிருந்தும் வேறு பல ஊர்களிலிருந்தும் கொஞ்சம்கூட வேறு பாடற்ற ஒன்றிற்கொன்று சாட்சியமாக அமையும்' ஒரு செய்தியை வைத்து வெ. சாமிநாதன் எழுதியிருக்கும் ஐந்து பக்கக் கட்டுரையைக் 'கசடதபற—13'-ல் பார்க்க மிகுந்த வருத்தம் ஏற்பட்டது. எதற்கு எது, எந்த அளவுக்குப் பதில், என்று ஒன்றிருக்கிறது. அந்த முறையில் இக் கட்டுரைக்குக் 'கசடதபற' என்றில்லை, எந்தப் பத்திரிகையிலும் இடமில்லை. ஜெயகாந்தன் வெ. சாமிநாதன் மீது ஒரு கட்டுரையாகவோ அல்லது குறைந்த பட்சம் ஒரு பொது மேடையிலோ அவர் சீறியதாகக் கூறப்படும் முறையில் சீறியிருந்தால்கூட வெ. சாமிநாதன் இவ் விஷயத்தை ஒரு பொது விஷயம் என்று சமாதானப்படுத்தி 'கசடதபற—13' கட்டுரையை எழுதியிருக்கலாம். ஆனால் தனிப்பட்ட ஒரு சிறு குழுவில், அந்த நான்கு பேரோ ஐந்து பேரோ, நண்பர்கள், ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டவர்கள், சொல்லப்படும் வார்த்தைக்கும் அப்பாற்பட்டு உணரக் கூடியவர்கள் என்ற நம்பிக்கையில் கூறப்பட்டது. இப்படி அந்தரங்க சம்பாஷணையில் நடந்ததற்கு மறுப்புக் கூறித்தான் தன் தன்மானம் காப்பாற்றப்படும் நிலையில் இருக்கிறது என்று வெ. சாமிநாதன் கருதினால் இக் கட்டுரையைக் கடிதமாக எழுதி நேராக ஜெயகாந்தனுக்கே அனுப்பியிருக்கலாம். கோழைத்தனம் என்ற சொல் வெ. சாமிநாதன் கட்டுரையில் இருக்கிறது. இந்த விஷயத்தில் தன் கண்டனத்தை நேரிடையாகத் தெரிவிக்காமல் இப்படி ஒரு பத்திரிகை மூலம், அதாவது ஒரு மூன்றாம் நபர் மூலம் கூறியிருப்பதில், வெ. சாமிநாதன் தான் கோழைத்தனம் என்ற குற்றச்சாட்டுக்கு இலக்காகியிருக்கிறார். வெ. சாமிநாதன் எடுத்துக் கொண்ட அளவுகோலைப் பிறர் கையாண்டு, தன் சொந்த சம்பாஷணைகளில் வெ. சாமிநாதன் எண்ணற்றவர்கள் பற்றிப் பேசியதையெல்லாம் அந்தந்த நபர்களுக்கு கண் மூக்கு வைத்து உளவு கொடுத்து அவர்களை வெ. சாமிநாதன் மீது திருப்புவது எவ்வளவு அநாகரிகமான செயலோ அவ்வளவு அநாகரிகம் வெ. சாமிநாதன் செயல்.

2. அற்ப விஷயத்தை, அந்தரங்கமான விஷயத்தைப் பொது வம்பாக மாற்றிய பின் வெ. சாமிநாதன் உடனடியாக அவருக்குச் 'சென்னையிலிருந்தும் வேறு பல ஊர்களிலிருந்தும்' யார் யார் என்ன தகவல் கொடுத்தார்கள் என்று ஜெயகாந்தன் யார் மத்தியில் பேசினதாகத் தெரிகிறதோ அவர்களிடம் தெரிவித்து, அவர்களிடம் இவ் விஷயம் பற்றி நேரடித் தகவல் சேகரித்து, ஜெயகாந்தனையும் இதைப் பற்றி விசாரித்து, பின் ஜெயகாந்தன் மீது நடவடிக்கை எடுக்கவேண்டும். இதற்கு அனாவசியமாகச் சிறு பத்திரிகைகளின் பக்கங்களை வீணடிக்காமல் கடிதம்மூலம்இந்தக் குறைந்த பட்ச நடவடிக்கை எடுத்து அதன் பிறகு நீதிமன்றமும் செல்லவேண்டும்.

3. வெ. சாமிநாதன் கட்டுரையைப் பொறுத்தவரையில், ஜெயகாந்தன் கேட்டதாகச் சொல்லும் கேள்விக்கு வெ. சாமிநாதன் இன்னும் பதில் தரவில்லை. 'ரிஷிமூலம்' வெளியானபின் தினமணி கதிரில் வெளியான ஆசிரியர்-குறிப்புக்கு எழுத்தாளர்களுக்காகச் சினங்கொண்டும் எழும் வெ சாமிநாதன் அந்நேரத்தில் என்ன செய்து கொண்டிருந்தார் என்பதற்குப் பதில் இல்லை. அந்த ஆசிரியர்—குறிப்பு வந்ததற்குப் பின்னும் ஜெயகாந்தன் தினமணி கதிரில் எழுதினார் என்ற சால்ஜாப்பு செல்லுபடியாகாது. எழுத்தாளர்களுக்கு நேரும் அவமதிப்பைக் காணச் சகிக்காத வெ. சாமிநாதன் அந்த நேரத்தில் ஏன் ஒரு சிறு எதிர்ப்புக்கூடத் தெரிவிக்கவில்லை? தினமணி கதிர்க்கோ அதன் ஆசிரியருக்கோ ஒரு வரியாவது இதைக் கண்டித்து எழுதினாரா? அந்த நேரத்தில் இம்மாதிரிக் கண்டனங்களை வெளியிடுவதற்கு வேறு பத்திரிகைகள் இல்லை என்று கூறினாலும் அதுவும் ஒரு சால்ஜாப்பே. அப்படியென்றால் அவர் கட்டுரைகளை வெளியிடப் பணியும் பத்திரிகைகள் இருந்தால் தான் வெ. சாமிநாதன் எழுத்தாளர்களின் சகாயத்திற்கு வருவார் என்றாகிறது. அப்படியென்றால் வெ. சாமிநாதனுக்கு எழுத்தாளனுக்கு நேரும் அவமதிப்புப் பெரிதல்ல, அவர் தனக்குக் கட்டுரைகள் எழுதிப் பிரசுரிக்கக் கிடைக்கும் வாய்ப்பே பெரிது என்றும் ஆகிறது.

## நபும்சகம்

முன்பணம் பிடித்ததில்
என்பணம் போனதால்,
முதல்தேதி கிடைத்தது
ஸிரோத் பாக்கட் மட்டுமே
சம்பாத்யம் புருஷலட்சணம்.
எந்த ஆண்மையை நான்
உபயோகிக்கப் போகிறேன்?

—நீலமணி

---

4. அரசாங்கப் பணத்தைச் சரிவரப்பார்க்காத பிரெஞ்சு திரைப்பட டைரக்டர் ஹென்ரிலாங்லுவாவை அரசாங்க உத்தியோகத்திலிருந்து வேலை நீக்கம் செய்ததற்கு சார்த்தர், சைமன் டி போவா போன்ற எழுத்தாளர்கள் தெருவில் கோஷமிட்டுச் சென்ருர்கள் என்பதை வெ. சாமிநாதன் கட்டுரைக்கு முத்தாய்ப்பாகத் தருகிருர். காங்கிரஸ் கட்சி தேர்தலுக்காக ஜெயகாந்தன் மேடை பேச்சுக்குப் போனுல் அவர் காமராஜ் அடியாள்; சிவாஜி கணேசன் பாராட்டு விழா ஒன்றில் கலந்து கொண்டால் அவர் சிவாஜி கணேசனின் பணியாளர்,அப்படியென்ருல் சார்த்தர், சைமன் டிபோவா போன்றவர்கள் ஹென்ரி லாங்லூவாவுக்கு என்னவேண்டும்? சினிமா டைரக்டராயிருந்தால் அரசாங்க உத்தியோகத்தில் ஊழலாயிருக்கலாம் என்று வெ. சாமிநாதன் கூறுகிருா? ஜெயகாந்தன் ஆசிரியராக நடத்திய ஞானரதத்தில் வெ, சாமிநாதன் தொடர் கட்டுரை எழுதியபோது அவர் ஜெயகாந்தனுக்கு என்னவாக இருந்தார்? வெ. சாமிநாதன் காட்டும் நியாயங்கள் நபருக்கு நபர் மாறுபடுவதோடல்லாமல் விநோதமாகவும் இருக்கின்றன. தினமணி கதிருக்கோ அதன் சகோதரப் பத்திரிகை ஏதாவதொன்றுக்கோ புதுடில்லியில் காரியாலயம் இருக்கக் கூடும். அங்கே போய் சார்த்தர், சைமன் டி போவாவின் வழி முறைகளைப் பாராட்டும் வெ. சாமிநாதன் கோஷங்கள் எழுப்பி ஓர் ஊர்வலம் நடத்தியிருக்கலாம்; இப்போதும் அதற்குக் காலதாமதமாகவில்லை.

5. ஜெயகாந்தான் தன்மீது சீறியதாகக் கூறப்படுவதற்கு பதில் தருவதாக ஆரம்பித்து, ஜெயகாந்தன் தினமணி கதிர் ஆசிரியரிடம் எப்படி எப்படி பேசியிருக்க முடியும், எப்படி எப்படி அந்த ஆசிரியரின் நன்மதிப்பை நீடித்துப் பெற்றிருக்க முடியும் என்பதைத் தன் கற்பனையாற்றல் மூலம் சுமார் மூன்று பக்கங்களுக்குக் குறையாமல் வெ. சாமிநாதன் எழுதியிருக்கிருர். இவ் விஷயங்கள் சர்ச்சை செய்யப்பட வேண்டிய விஷயங்கள் அல்ல. இவை ஜெயகாந்தனின் சொந்த விஷயங்கள். வெ. சாமிநாதன் கட்டுரை வரை இது தனி நபர் வம்பு. இதற்கு முறையான பதில் வெ. சாமிநாதன் அவர் காரியாலயத்தில் மற்றவர்களுடன் எப்படி உறவு முறைகள் வைத்திருக்கிருர், அவருடைய அதிகாரிகளிடம் எப்படி நடந்து கொள்கிருர் என்பது பற்றி எழுதுவதுதான். ஒரு படைப்பை அதை எழுதி முடித்ததோடு எழுத்தாளன் பணி முடிகிறது. அதன் பிறகு அதை வெளியிட வழி தேடுவது முற்றிலும் வேறு விஷயம் வெ. சாமிநாதன் தலைவணங்கும் சார்த்தரும் சைமன் டி போவா போன்ருேரும் தங்கள் படைப்புகளுக்கு அதிகப் பலன் ஏற்படும் சாதனங்களில்தான் வெளியிட்டுக் கொள்கிருர்கள். வெ. சாமிநாதனுக்கு சார்த்தர் பற்றியும் சைமன் டி போவா பற்றியும் தகவல் தெரிவிக்கும் பிரசுரங்களே மேல் நாட்டினர் தினமணி கதிராகப் பாவிக்கும் 'டைம்', 'நியூஸ்வீக்' போன்ற லட்சக்கணக்கான பிரதிகள் விற்கும் பிரபல பிரபல பிரபல பத்திரிகைகள்தான். வெவ்வேறு நபர்களுக்கு வெவ்வேறு நியாயம் காட்டும் வெ. சாமிநாதனுக்கு இந்த அம்சங்கள் அறிவில் எட்டாமல் போவது ஆச்சரியமாயில்லை. ஜெயகாந்தன் தினமணி கதிரில் எழுதினுல் என்ன, குமுதத்தில் எழுதினுல் என்ன—அவர் எழுத்து இலக்கியத்தரமாக இருக்கிறதா இல்லையா என்று பரிசீலிப்பதுடன் விமரிசகன் வேலையும் உரிமையும் முடிகிறது. இந்தத் தனி நபர் வசைபாடு அத்து மீறிய செயலாகும்.

6. இம் மாதிரி தனி நபர் தாக்குதல்களை எழுத்தாளர்கள் மீது நடத்தும் வெ. சாமிநாதனும் அவர் போன்ருேரும் ஒரு முக்கிய விஷயத்தை உணர்ந்து கொள்ள வேண்டும். இவ்வாறு தாக்குதல் நடத்துவோர் பட்டியலில் ஒரு நாரண துரைக்கண்ணனையோ, ஒரு வல்லிக் கண்ணனையோ,கி.ராஜ நாராயணனையோ, அழகிரிசாமியையோ, ஷண்முக சுந்தரத்தையோ, எம். வி. வெங்கடராமனையோ காணமுடியாது. இவர்களைவிட இந்தத் தாக்குதல்களை நடத்துகிறவர்களுக்கு எழுத்தின் மீது ஈடுபாடும் பொறுப்பும் உரிமையும் உண்டு என்று யாரும் கூறிவிட முடியாது. வெ. சாமிநாதனும் அவர் போன்ருேரும் நடத்தும் இந்தத் தனி நபர் தாக்குதல்கள் இன்றைய தமிழ் இலக்கிய உலகின் முக்கியமான முரண்பாடு.

7. இந்தக் காரணத்தினுலேயே இந்த விமர்சகசர்கள் யாருடைய ஆதரவுக்காகப் போனுலும் எண்ணியதற்கு நேர் எதிரான விளைவுகளே ஏற்பட முடியும். இந்திரா பார்த்தசாரதி பிரபல பத்திரிகைகளில் பிரசுரமாகி இலக்கிய உலகிற்கு வந்தவர். அவரை ஆதரிப்பதாகக் கிளம்பி யரர் யாரையோ முறை

கெடாகத் தாக்கியதன்மூலம் பிரபல பத்திரிகைகளிலும் இடம் கிடைத்த ஒரு நல்ல எழுத்தாளனை அச் சாதனங்களிடமிருந்து பிரித்துவிடத்தான் முடியும். இவ்விளைவுகளால் முழுக்க முழுக்கப் பாதிக்கப்படுகிறவர் இந்திரா பார்த்தசாரதிதான். வெ. சாமிநாதனுக்கு யாதொரு நஷ்டமுமில்லை.

8. 'தன் சரக்கு விலை போகவேண்டும் என்பதற்காக, ஜெயகாந்தன் எடுத்துக்கொள்ளக் கூடிய செயல் முறைகளை, இலக்கிய விமரிசகன் என்ற வரம்பைக் கடந்து வெகு தூரம் திசை தப்பிச் சென்று தாக்கியிருக்கும் வெ. சாமிநாதன் தன் சரக்காகிய இக் 'கசடதபற' கட்டுரை பிரசுரமாவதற்கு எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் எப்படிப்பட்டவை? இதே கட்டுரையை கசடதபறவுக்குத் தெரிவிக்காமல் இரகசியமாக கணையாழிக்கும் தாமரைக்கும் அனுப்பினர் என்பதற்கு இறுதியில் அவரே ஒத்துக்கொள்ள வேண்டியிருந்திருக்கிறது. ஆர்ட் புக்வால்டு செய்வதுபோல என்ருெரு விளக்கம். தன்னை ஆர்ட் புக்வால்டாகக் கற்பிதம் செய்து கொள்கிறவர் ஆர்ட் புக்வால்டைப் போல் எழுத்துத் துறையில் தன் வாழ்வை முழுப் பணயமாக வைத்திருக்க வேண்டும். அது ஒரு புறமிருக்க, எவ்வளவோ வருடங்களாகக் கட்டுரைகளும் ஆசிரியர்க் கடிதங்களும் எழுதி வருபவர் திடீரென்று இந்தக் 'கசடதபற' கட்டுரை விஷயத்தில் மட்டும் ஆர்ட் புக்வால்டைப் பின்பற்றி ஒன்றுக்கு மேற்பட்ட பத்திரிகைகளில் பிரசுரம் கிடைக்கக் காத்திருந்த காரணம் என்ன? அதிலும் 'தாமரை'க்கு இந்தக் குறிப்பிட்டக் கட்டுரையை அனுப்பித்ததிலிருந்து வெ. சாமிநாதன் இலக்கியக் கொள்கைகள் தெளிவாகின்றன. தன் சரக்கு விலைபோகும் இடமாகப் போகவேண்டும் என்பதைத் தவிர வேறு என்ன இலக்கிய சேவை இச் செயல் மூலம் உருவாகிறது? மிகையான சுய அபிமானமும், தன் வசவுகள் இலக்கை எட்டவேண்டும் என்பதற்காக எப்படிப்பட்ட முறைகளுக்கும் இறங்கும் தன்மையே இச் செயல் தெளிவாக்குகிறது.

9. இன்றைய யதார்த்தத்தில் தமிழ் படிக்கும் வாசகர்கள் எண்ணிக்கையில் பெருத்த அளவில் இருக்கிருர்கள். ஆனுல் இதில் ஆழமான எழுத்தை நாடிப்பேசுகிறவர்கள் மிக மிகக் குறைவு. மீண்டும் மீண்டும் கல்கியையும் அகிலனையும் நா. பார்த்தசாரதியையும் சாண்டில்யனையும் குற்றம் சாட்டிக் கொண்டிருப்பதில் பலனேதுமில்லை. இன்றைய தமிழ் வாசகரின் சராசரித் தரத்தை உயர்த்துவதற்கு நல்ல எழுத்து நிறையப் பேர் பார்வைக்கு எட்டக்கூடிய முறையில் இருக்கவேண்டும். தமிழ் இலக்கியம் மேலும் உத்வேகம் பெறவேண்டும், தரமுள்ள எழுத்தை நாடிப்போகும் தமிழ் வாசகர் எண்ணிக்கை பெருக வேண்டுமென்ற அக்கறை கொண்டிருப்பவர்கள் பிரபல பத்திரிகைகளை சந்தர்ப்பம் வரும்போது அவசியம் கோபிப்பார்கள், கண்டனத்தைத் தெரிவிப்பார்கள். ஆனுல் இனி உன் உறவே வேண்டாம் என்ற முறையில் யமதர்ம ராஜப் பார்வை பார்த்து தீர்ப்புக் கூறி ஒதுக்கித் தள்ளிவிட மாட்டார்கள். ஒரு பெரிய லட்சியத்தை யடையக் கீழ்த்தளத்தில் உள்ள சிறு சிறு பொத்தல் கோணல்களைப் பெரிது படுத்தி அத்தோடு நின்றுவிட மாட்டார்கள். தமிழ் மொழி இலக்கியம் செல்வாக்கு பெறவேண்டும், உயர்தர இலக்கியமே மக்கள் இலக்கியமாகவும் ஆகவேண்டும் என்பவர்கள் இந்த இருபதாம் நூற்ருண்டின் குறிப்பிடத்தக்க, இன்றியமையாத சாதனமாகிய பெருவாரிப் பத்திரிகைகளைப் பயன்படுத்திக் கொள்வார்கள், பயன்படுத்திக் கொண்டுதானிருக்கிருர்கள். முன்னேற்றம் அடைந்த எல்லா நாடுகளிலும் பாரிஸ் தெருவில் சார்த்தரும் சைமன் டி போவாவும் கோஷமிட்டு ஊர்வலம் சென்றதை அறிந்தவருக்கு இத் தகவலும் தெரிந்திருக்கவேண்டும். ஒரு பத்திரிகையின் ஆசிரியர் ஹோட்டல் நடத்தியிருந்தால் என்ன, பத்திரிகையின் முதலாளி மார்வாரியாயிருந்தால் என்ன?

---

10. தமிழ் மொழி இலக்கியம் வளம் பெற வேண்டும் என்று உண்மையாகவே நாட்டம் உள்ளவர்கள், தமிழ் மக்கள் இலக்கிய ரசனை உயர்ந்து சர்வதேசத் தரத்தையடையவேண்டும் என்று உண்மையாகவே அக்கறையுள்ளவர்கள் ஆர்ப்பாட்டம் இல்லாமல் பணி புரிந்து கொண்டிருப்பார்கள். ஒரு பெரிய இலக்கை அடையவேண்டும் என்ற திடமான தீர்மானத்தினால் அந்தப் பயணத்தில் சிறு தடங்கலும் உண்டாகக்கூடாது என்பதற்காக ஒரு சிறு பிழையும் தாங்கள் புரிந்துவிடக்கூடாது என்ற அச்சம் கொண்டிருப்பார்கள். ஆனால் வெ சாமிநாதன் போன்றவர்களுக்கு தமிழ் மொழி இலக்கியம் மீதும் அக்கறை கிடையாது. தமிழ் வாசகர்கள் மீதும் அக்கறை கிடையாது. அவர்கள் கோஷமிடுவதோடு சேர்ந்து கோஷமிடாவிட்டால் எல்லாரும்மூக்கரையர்கள் அவர்கள் பேசும் ஏச்சுகளை ஆமோதிக்கா விட்டால் சுரணை கெட்டவர்கள். மனிதனாகவாவது மதிக்கும் அடிப்படைப் பண்புகூட இல்லாத இவர்கள், 'நீரளவே ஆகுமாம் நீராம்பல், தமிழ் நாட்டின் தகுதித் கேற்றவாறுதான் நமக்குப் பத்திரிகையாளரும் எழுத்தாளர்களும் அறிஞர்களும் சிந்தனையாளர்களும் சிறுகதை மன்னர்களும் கிடைக்கிறார்கள்' என்று ஏசி எங்கோ தாங்கள் தப்பித் தவறி இம் மக்களிடையில் அவதரித்து விட்ட தெய்வங்கள்போல் பாவித்துக் கொள்வார்கள். இவர்களுக்கு இலக்கிய உலகில் புகுந்து முறைகேடாகக் குட்டை குழப்புவதில் யாதொரு அச்சமும் கிடையாது. ஏனென்றால் இவர்களின் பொறுப்பற்ற செயல்கள் இவர்களைப் பாதிக்கப்போவதேயில்லை. ஆனால் இவர்களின் பொறுப்பற்ற செயல்களின் விளைவுகளை அனுபவிப்பவர்கள் தொடர்ந்து படைத்துக்கொண்டு, தம் படைப்புகளை உலகுக்கு அளிக்கவேண்டிய கடமையும் பொறுப்பும் உள்ள உண்மையான எழுத்தாளர்கள். தங்கள் பொறுப்பற்ற செயல்களுக்கு இலக்கியத் துறையில் விளைவுகளில்லாத வெ. சாமிநாதன் போன்றவர்கள் உண்மையிலேயே வீரதீரம் பொருந்தியவர்களானால் அவர்களுக்கு விளைவுகள் ஏற்படக்கூடிய துறையில் தங்களுடைய ஆவேசத்தையும் தன்மானத்தையும் கோபத்தையும் காட்டவேண்டும்.

(இத்துடன் இந்த விவாதம் முடிவடைகிறது. — ஆசிரியர்) ●

# சலனங்கள்

**சசிப்ரியா**

அவன்—அந்த ஒரு ரூபாய்க்கட்டை, புதுத்தாளை, சில சில்லறைகளுடன் மடியில் எடுத்துவைத்துக் கொண்டான். தன் மடியிலிருந்து எதுவும் விழாது என்ற நம்பிக்கை அடிக்கடி அவனுக்குவரும். நிறைய பேரிடம் அதைப்பற்றிச் சொல்லியும் கொள்வான்—

இன்றையப் பொழுது அவனுக்குச் சீக்கிரமாய் விடிந்துவிட்டது. இன்று வழக்கத்திற்கு மாறாக நிறைய நேரம் தூங்கவேண்டுமென நினைத்தான். ஆனால் ஆறு மணிக்கு எழுந்துவிட்டான் — தெரு முனைவரும்வரை தான் கண்ட கனவையே நினைத்தபடி நடந்தான். நேற்றுப் பாடம் நடத்திய பி. ஜி புரொபஸர் 'ஒருகண்ணாடிக் காரி'யிடம் குழைந்ததைகண்டு செருமுகிறான். அவர் உனக்கு ஸீட் கிடையாது' போகலாம் என்றார். இவன் 'குட்பை' கூறிவிட்டு வந்தான். அப்புறம்தான் இவனுக்குப் புரிந்தது, தான் அட்டெண்ட் பண்ணியது interview class என்று தனக்கு M.Sc கிடைக்காது என்று அவன் நம்பினான். இதையொரு சென்டிமென்டலாய் எடுத்துக்கொண்டான்.

அதனாலென்ன கொஞ்சநாளாகப்பார்த்த டெம்பரரி வேலையை காயமாக்க வழி பண்ண முடியும் என்று நம்பினான். வேலை என்றதும் அவன் மடி கனத்தது. மணி 9-05. 10 மணிக்குத்தான் அந்த எலெக்டிரிகல் ஷாப்திறப்பான். அதுவரை பஸ் ஸ்டாண்ட் அரட்டைதான். வழக்கமான ஒருத்தியையும் ஸ்டாப்பில் காணும். எவனோ கேட்டான் 'ஏண்டாலேட்' என்று. 'இவன் சலித்துக் கொண்டான், "அதெல்லாம் ஒன்ஸ் அபான் எ டைம்' டா அவ வருவான்னு $8\frac{3}{4}$க்கு காத்திருப்பது—" $5\frac{3}{4}$க்கு பல்லிளிப்பது.

'அவ' என்றதும் M.Sc அட்மிஷன் நினைவு வந்தது. அவனும் கேட்டான். 'என்னடா ஆச்சு நேரத்தைய இண்டர்வியூ'— நான் நல்லா பண்ணியிருக்கேண்டா டெஸ்ட் இண்டர்வியூவெல்லாம். ஆனா அவன் 'அட்டெம்ப்ட்' ஆச்சே உனக்கெப்படித் தர முடியும்கிறான்— ஒண்ணுந் தெரியல விவரம்' என்றான்.

'அவன் சாப்பிடப் போவோம் வாயேன்' என்றான். இவனுக்குத் தான் வைத்திருந்த ரூபாய்க்கட்டை எடுத்துக் காண்பித்து—'தன் வேலை'யின் மதிப்பைக் காண்பிக்க ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறதென்ற நினைப்போடு போனான். உள்ளே நுழைகையில் இன்னும் இரண்டுபேர் வந்தார்கள். உள்ளே கல்லாவில் நின்று கொண்டிருந்த போத்தியைப் பற்றி அவரின் 'சிவந்ததொலி' பற்றி ஒரு அசிங்கமான கமெண்ட் அடித்தான். சிலர் சிரித்தார்கள். ஒருத்தன் தன் கையிலிருந்த பாட்டிலைக் காண்பித்து பார்த்தியா 'அட்டை'!

எங்க புரொபஸர் ஸ்பெஸிமென்னு உயிரை வாங்குகிறுர் — அதுக்கு இது, என்றுன்... தொடர்ந்தொருவன் "ஏண்டா அது அசையாமக்கிடக்கு"? 'அதுவா' என் கூட அதுவும் நேற்று செகண்ட்ஷோ வந்துதுடா' அதான் தூங்குதென்றுசொல்லி; இளக்காரமாய்ச்சிரித்தான். பில்லே இவன் கொடுக்கவில்லே. தன் ரூபாயை வெளிக்காட்டிப் பெருமையடிக்க முடியாததற்கு வருத்தப்பட்டான்.

ஒருவனிடம் அவன் பேண்ட்டைப்பற்றி விலே கேட்டான். அவன் ஆன் த ஹோல் ஸிக்ஸ்டி கிலோ' ஆகுதென்றுன்—இவன் மடி கனத்தது. ஒரு டெரிலின் பேண்ட் எடுக்க வேண்டுமென நினைத்துக் கொண்டான். துணிக்கடை'யும் திறக்க நேரமாகும் முதலில் ஒரு எலெக்டிரிக அயர்ன் வாங்கவேண்டும். வேலேயோ, M.Sc யோ கிடைச்சா கொஞ்சம் டிரிம்மா போக வேண்டும். இப்ப இருக்கிற நூறு ரூபாயில் வாங்கலேன்னு, இதெல்லாம் ஒண்ணொன்னு செலவழிஞ்சுடும். திரும்பத் துவைத்த சட்டையுடன் ஏஜெண்ட் முன்னுல் குட்மார்னிங் சொல்லக் கூச்சப்படணும்...

'சரி...கடை திறக்கட்டும் வாங்கிவரலாம்' தனக்குள்ளேயே பேசிக் கொண்டான். ஒருத்தன் பஸ்ஸைக்கண்டதும் 'நான்போறேன்'னு போனுன். இன்னுமிரண்டுபேர் 'எவளோ'— அவளே இவனுக்குத் தெரியும் — வர அவர்களும் 'போய்விட்டார்கள் அந்தக் 'குண்டு ஜெயா' பின்னுல்.

இவன் 'அவளே' நினைத்துக்கொண்டான். அவளுக்காய் ஒரு காலத்தில்—போன மார்ச்சு வரை—8ீக்குத் தயாராய்க் காத்திருந்ததை நினைத்துச் சிரித்தான். ஏங்கினுன், கொஞ்சம் அழுதான். மணிக்கட்டில் அரிப்பெடுத்தது... வாட்ச்ஸ்டிராப் அழுக்காகிவிட்டது. அதை முதலில் மாற்ற வேண்டும்...சூப்பர் மார்க்கட் போய் வரலாம் போலிருந்தது. ஒரு பழைய பஸ்வந்தது. இவன் போனுன். அங்கே போனதும் ஒருத்தியிடம் 'வழி விடெ'ன்றுன். அவள் சலித்தாள். இவன் 'அப்றம் பெரிய இவ' மாறி பேசறது'... என்று ஏசினுன்...ஸ்டிராப் எவ்வளவென்றுன். கையிலிருந்த சில்லறையே போதுமானதாயிருந்தது. நோட்டுக்கட்டை எடுக்க வழியில்லே...எடுத்து அதை படக்படக் கென்று 'பின்'னேத்தளர்த்தி, கிழித்துத் தர முடியவில்லே. அதுக்கென்ன அயர்ன் வாங்கும் போது பார்த்துக்கலாம் என்று நினைத்தான்... இங்கேயே ஒரு பேண்ட் கிளாத் வாங்கலாமே...அதொரு நாற்பது. அதொரு அறுபது...சரியாயிருக்குமே. டெய்லரிங் சார்ஜ் வேணும்னு லேட்டாக கொடுக்கலாம். ஆனு அவன் 'பேண்ட்' சரியாகத்தைக்கமாட்டானே! என்று நினைத்துக்கொண்டான்.

எனக்கேன் பேண்ட் வாய்க்கவே மாட் டேங்கிறது ... விலே கேட்டான். 'மீட்டர் ஐம்பத்தைந்து. உங்களுக்கு ஒன்னுபத்து வேணும்—கிழிக்கட்டா' என்றுன் சுந்தரம். அவனே இவனுக்குத் தெரியும். 'வேண்டாம் பார்த்துக்கலாம் வரேன்' என்று வெளியே வந்தான். அந்தக் கடை திறந்துவிட்டான். போனுன். ஹல்லோ வாங்கவென்று வரவேற்றுன்; அவனேயும் இவனுக்குத் தெரியும். அயர்ன்பாக்ஸ் காண்பியுங்கள் என்றுன். இவன் நினைத்த மாடல் 60 ரூபாயென்றுன். இவன் யோசித்தான். வேறிதை வாங்கப் பிரியமில்லே. இதை வாங்கவும் யோசனே. சட்டென்று சொன்னுன் 'பார்த்துக்கலாம்.' 'ஒரு டிரான்ஸிஸ்டர் வாங்கலாமே; இன்ஸ்டால் மெண்டில் வேண்டுமானுல் தருகிறேம்' என்றுன் கடைக்காரன். இவனும் யோசித்தான்...

திடீரென்று M.Sc நினைவு வந்தது. வேலேயென்னமோ திரும்பக்கிடைக்கப்போறதில்லே. இந்த ரூபாய் செலவழியாம இருந்தா இரண்டு மாதமாவது காலேஜுக்கு'ப் பஸ்ஸில் போகலாமே' என்று நினைத்துக்கொண்டான். இனிமே—எவன் வேலே தரப்போறுன், இந்த மாதிரி...அப்படியே தந்தாலும் இந்தச் சம்பளம் யார் தரப்போருன்—' விடுவிடென்று அவனிடம் சொல்லிவிட்டு வெளியேறினுன்- ஏதாவது டிரிங்க் சாப்பிடணும் போலிருந்தது.. சர்பத் சாப்பிட்டான். சில்லறையாயில்லே. கடையைச் சுற்றி ஒருவருமில்லே. கடையிலும் பத்துவயதுச் சின்னப்பையனே அமர்ந்திருந்தான்...

நோட்டுக் கட்டைத்தான் உடைக்க வேண்டும். எடுத்துப்பிரித்தான்...ஒரு தாளே எடுத்து நீட்டினுன். பையன் அலட்சியமாய் வாங்கி, ஏற்கெனவே சில சில்லறைக் காசுகள் மூழ்கிக் குளித்துக் கொண்டிருந்த ஒரு பேஸினில்...இந்தக் கசங்காத தாளேயும் மிதிக்கவிட்டு சில்லறை தந்தான். இவன் பையனைப் பரிதாபமாய்ப் பார்த்தான்...அவன் 'ஒண்ணுஞ் செய்யாது' சார் என்றுன். இவன் 'சரிப்பா' என்று கூறித்திரும்பினுன். பஸ் ஏறி வீடு வந்தான்.

ரூபாய் நோட்டை எண்ணினுன். 99 சரியாயிருந்தது. ஏற்கெனவே ஷெல்பில் இருந்த 'பொடிச் சில்லறைகளேயும்' எண்ணினுன். சாதாரணமாக எண்ணினுன். 99 பைசா இருந்தது. ஏதோ ஒரு திருப்தியுடன் நோட்டை டப்பாவில் வைத்துவிட்டு, வாட்சின் பழைய ஸ்டிராப்பைக் கழற்றத் தொடங்கினுன்... ●

(4ஆம் பக்கத் தொடர்ச்சி)

போகிற இயல்பும் இவற்றில் தெளிவாகத் தெரிகின்றன. "இங்கிருந்து, இந்தியாவைப் பற்றி இங்குள்ள ஜனங்கள் புரிந்து கொள்வதும், நம் தூதரகம் புரிய வைப்பதையும் கண்டால் தி. மு. க.வில் சேர்ந்து விடத் தோன்றும்" என்று ஒரு கடிதத்தில் எழுதுகிருர்.

இன்னெரு கடிதத்திலிருந்து சில வரிகள்:—'ஃப்ரான்ஸில் சில நாட்கள் தங்க வேண்டுமென்ற ஆசையுண்டு. மோனலிஸா பார்த்தேன். அவ்வம்மணி கண்ணுடிக் கூண்டில் அடைக்கப் பட்டிருக்கிருள். அங்கே மூச்சு முட்டுவதை நினைத்து அவள் புன் சிரிப்புச் சிரிக்கிருள். பாவம் டாவின்ஸி! வீனஸ் டிமெலோ—அவள் தளர்ச்சியுற்றிருக்கிருள்! என்னே, ஜனங்களின் அழகுணர்ச்சி! மோஸஸுக்கு இப்போதும் கோபம் தீர்ந்த பாடில்லை. இயேசு தேவன் துக்கம் மிக்கவனுகக் காணப்படுகிருன்.'

ஓர் சில இடங்களில் தன்னம்பிக்கையும் மற்ற சில இடங்களில் ஆற்ருமையும் தொனிக்கிற கடிதங்கள் இவை. ஸமீக்ஷாவின் இவ்விதழில் மற்றெல்லாவற்றையும் விட உயிரோட்டம் மிக்கதும், உண்மை நிரம்பியதும் இப்பகுதியே. இவை ஸமீக்ஷாவில் பிரசுரத்திற்காக மட்டுமே எழுதப்பட்டவையல்ல என்பதும், edit செய்யப்படாதவை என்பதும் இவற்றில் ஆங்காங்கே தலை நீட்டும் சொந்த விஷயங்களிலிருந்து தெரிகிறது.

இவற்றைத் தொடர்ந்து விஸ்வநாதனின் சில சொற்சித்திரங்கள். லியனர்டோ டாவின்ஸி திரும்பி வந்து இவருடன் பல விஷயங்களைப் பற்றியும் விவாதிப்பது போல ஒரு அமெச்சூர் கற்பனை. அதனிடையில் ஆங்காங்கே பளீரென்று மின்னி நம்மைத் துள்ள வைக்கும் வாக்கியங்கள்.

'உன் ஸ்கெட்ச் புக் எங்கே?' என்று கேட்கும் லியனர்டோ விற்கு இவர் பதில்: "கம்ப்யூட்டர் ஸம்ப்ரதாயம் படித்துள்ள எனக்கு ஸ்கெட்ச்-புக் அவசியமில்லையென்று உங்களுக்குத் தெரியாதா?" சற்று நேரத்திற்குப் பின் லியனர்டோ இவரிடம் ஐ. பி. எம். (I. B.M.) கம்ப்யூட்டர் பற்றிக் கேட்க அதற்கு இவர் பதில்: "ஸார்! அப்படிப்பட்ட இயந்திரங்களை உருவாக்கத் தேவையான சில அடிப்படைத் தத்துவங்களின் தாத்பர்யத்தை உங்களுடைய கோடுகளில் எனக்கு முகர்ந்தறிய முடிகிறது."

கட்டுரையின் இரண்டாம் பகுதியின் ஆரம்பத்தில் சில வரிகள்: "மலையாளத்தில் லிபி ஒரே மாதிரியே இருக்கிறது. ரோமன் எழுத்துக்கள் இரண்டுவிதம் பெரியதும், சிறியதும் (capital and small letters). காரண மென்னவென்று பிடி கிடைக்கவில்லை...இந்த யோசனையுடன் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருக்கையில் லியனர்டோவிடமிருந்து ஒரு தந்தி வருகிறது. 'பாலமே, உன்னை நான்முத்தமிடுகிறேன்' என்று... 'லியனர்டோ கனவு கண்டிருக்க வேண்டும். இல்லாவிடில் படைத்தவன் சிருஷ்டி நடத்தும் நேரத்தில் ஒரு தந்தியடிக்கத் தோன்ருது..." என்று கற்பனை ஓடுகிறது.

'பாலம்' என்ற ஒரு வார்த்தையின் தொடர்பாகக் கிளம்பியிருக்கும் யோசனைகளும், எண்ணக் குவியல்களும் ஒரு வியப்பளிக்கும் நவீன சொல்லோவியமாக அமைந்திருக்கின்றன. ஒன்ருேடொன்று தொடர்பில்லாத பல நினைப்புக்களைச் சேர்ந்தாற்போல் நினைக்கிற சாமர்த்தியம். aberration of thoughts. ஆனல் அவற்றை ஒன்றுடனென்று சம்பந்தப் படுத்துகிற நூலிழை மர்மம். இதே ரீதியில் இதைத் தொடர்ந்து இன்னும் சில கட்டுரைகள். அயல்நாட்டில் உறைந்து கொண்டிருக்கும், சிந்திக்கத் தெரிந்த ஒரு இந்தியனின் எண்ண வெளிப்பாடுகள்.

"புவன் ஸோம்"—பனஃபூலினுடையவும், மிருணுள் ஸென்னுடையவும்" என்ற மங்கட ரவிவர்மாவின் கட்டுரை மிருணுள் ஸென்னை ஒரு மனப்பூர்வமற்ற வியாபாரியாகக் குற்றம் சாட்டுகிறது. சிறப்பான நாவலிலிருந்து பிறந்த எந்தத் திரைப்படம்தான் நமக்கு முழுத்திருப்தியைத் தந்திருக்கிறது?

கே. ஆர். ஸச்சிதானந்தத்தின் 'கல்கத்தா, கல்கத்தா, ஓ கல்கத்தா' என்ற கட்டுரையில் ஆசிரியர் அறிமுகம்: தமிழில் ஓர் இளம் கவிஞனும், விமரிசகனும் ஆவர். நடை கசடதபற என்ற முற்போக்குப் (Progressive) பத்திரிகைகளின் ஆரம்பக்காரர்களில் முக்ய மானவர். கட்டுரையின் முதற்பகுதி கல்கத்தாவைப் பற்றிய பத்திரிகைச் செய்திகளைப் பொய்யாக்கும் வெறிமிக்கமுயற்சியாக உள்ளது. தொடர்ந்து அசாதாரணமற்ற, சுவாரஸ்யமாகச் சொல்லப்பட்ட அனுபவங்களின் தொகுப்பு.

சில புத்தக விமரிசனங்களும் அடங்கிய இவ்விதழ் ஓரளவு கனமாகவே இருக்கிறது தரத்தில். ●

---

## மலடு

மழை நேரம்வாய் திறக்கா
மடச்சிப்பி
மணலோரம் குதிக்கின்ற மழலைக்கால்
ருசிபார்க்கும்

—பாலகுமாரன்

# கறுப்பு மலர்கள்

ஞானக்கூத்தன்

காமராசன் கவிதைகளைப்பற்றி என் மதிப்புரையில் நான் கொண்டிருக்கும் கருத்துகளை ராஜாராமின் கட்டுரை மாற்றி விடவில்லை. காமராசன் கவிதைகள், ஒன்றுவிடாமல் அத்தனையும், தேர்ச்சியுள்ள ஒரு வாசகனின் தொடக்கப் பரிசோதனைக்குக் கூடத் தாக்குப் பிடிக்காதவை. என்னுடைய மதிப்புரையில் நான் கூறியிருந்தது போல அந்தக் கவிதைகள் அனைத்துமே உண்மையான கவிக் கிளர்ச்சியினால் கூட உருவானவை அல்ல. ராஜாராம் எடுத்தாண்டிருக்கும் கவிதையும் சரி, அவர் பட்டியலிட்டுள்ள மற்ற தலைப்புகளும் சரி உண்மையில் கவிதைகளே அல்ல. கவிதை என்பது ஒரு படைப்பு. அதற்கு உருவம், நிர்மாணம், தொனி, தோரணை, நியதி, நிர்வாகம் என்று ஆயிரம் உண்டு. இவற்றை எல்லாம் ஆண்டு கொண்டு வெளிப்படுகிற ஒன்றைத்தான் கவிதை என்று அழைக்க முடியும். மனசுக்குத் தோன்றியதை எல்லாம் எழுதிக் கவிதை என்றால் சரிப்படாது.

தான் சொல்வதாக எதுவரவேண்டும். 'நான்' என்று ஒரு பாத்திரம் சொல்வதாக எது வரவேண்டும், படர்க்கைக்கு எது கொண்டு போகப் படவேண்டும் என்கிற ஆரம்ப அறிவுகூடக் காமராசனுக்கு இல்லை என்பதைக் கவிதைகளைப் பார்த்தால் தெரியும். 'எனது தொட்டில் பருவத்திலேயே நீ...... என் கைவிலங்கினைச் செய்தனையா' என்று பிச்சைக்காரி சொல்வதாகவும், 'நாங்கள் சீசர் காலத்தில் பிறந்திருந்தால் போப்பாண்டவர்களிடம் பாவமன்னிப்புப் பெறத் தேவையில்லை' என்று விலைமகள் சொல்வதாகவும் வருகிற வரிகள் என்னுடைய கூற்றைத் தெளிவு படுத்தும். ஒரு பிச்சைக்காரியையோ அல்லது விலைமகளையோ அல்லது அவர் விரும்புகிற வேறு ஒரு பேரையோ படைத்துக் காட்ட முடியாமல் அவர்கள் பெயரைப் போட்டுக் கொண்டு காமராசனே ஸ்பீச்சிஃபையிங்செய்வதைக்கவிதைகள் என்றுஎப்படி ஏற்றுக் கொள்ள முடியும்?

ஊர்வலம்போகிற, விழிக்கிற, திகைக்கிற, நீடூர்ச் சாயபுவின் தங்கப்பல் மாதிரி மினுக்குகிற சொற்களைக் கண்டு ராஜாராமுக்குப் பிரமிப்பு ஏற்பட்டிருக்கிறது என்றே தோன்றுகிறது. சில சொற்களையும், சில வரிகளையும் பார்த்துக் கவிதை என்று அவர் ஏமாறுகிறார். கவிதை என்பது ஒரு முழுப் பொருள். இப்படிப் பார்த்தால் காமராசன் கவிதைகளைப் பற்றிய என்னுடைய கருத்து முற்றிலும் சரி என்பது விளங்கும். அப்படி இல்லாமல், சில சொற்களோ சில வரிகளோ கவிதை என்று கொள்வது பெண்ணைவிட்டு விட்டு அவள் பாவாடை நாடாவைப் போற்றுகிற ஃபெடிஷிஸம்தான்.

ஒலிநயம், கவிநயம், எளிமை எல்லாம் இருப்பதாகக் குறிப்பிட்டு ராஜாராம் எடுத்துக் காட்டியிருக்கும் 'தபால்காரர் மரணம்' பற்றிச் சில வார்த்தைகள்:

தபால்காரரின் மரணத்தை ஒட்டிச் சேரி மக்கள் சொல்வதாக இந்தக் கவிதை அமைந்திருக்கிறது.

> தரை அழுகும் பறைச்சேரித்
> தரை மெழுக வந்ததுரை
> தரைக்குள்ளே போனதென்ன
> தனித்தூக்கம் ஆனதென்ன

—இப்படி ஒரு பகுதி. இந்த வரிகளில் 'தரைமெழுக' என்ற சொல்லின் பொருள் தெளிவாகவில்லை. நமக்குத் தெரிந்த பொருளைக் கொண்டு பார்த்தால் தபால்காரர் தரை மெழுகுவதை ஒரு அடிஷனல் டியூட்டியாகக் கொண்டிருந்தாரோ என்று நினைக்கத் தோன்றுகிறது. ஒரு சொல்லின் உறவுப் பொருளை அறியாததின் விளைவு இது.

> தம்பிடிகள் சேர்த்துத் தங்களுபா
> உண்டு பண்ணி
> முழுநிலவில் கடை சேர்ந்தோம்
> முழுரூபா செல்லலியே.

—இந்த முழுரூபாய் செல்லாமல் போன விவரம் தபால்காரரின் மரணத்தை ஒட்டி எதனால் சொல்லப்படுகிறது என்று தெரிகிறதோ?

> தாளென்றும் சிடுகென்றும்
> தலைச்சுமைகள் கொண்டுவந்தும்
> கூரை நிலைக்கலியே
> சாரலுக்குப் பொறுக்கலியே.

—இந்த நான்கு வரிகளின் பொருத்தமும் பொருள் தெளிவும் அந்தக்கவிதையில் மயங்கியுள்ளன. இந்த இடர்ப்பாடுகள் தோன்றிய பிறகு, அதை எப்படிக் கவிதையாக ஒப்புக் கொள்ளமுடியும்? இந்த இடர்ப்பாடுகள் ராஜாராமுக்குத் தோன்றவில்லை. அவர்

கொடுத்து வைத்தவர். கவிதைகளை ரசிப்பதில் பொதுப்புத்தி எனக்கு மட்டும் தான் தடையாக இருக்கிறது.

இந்தக் கவிதைகளின் உள்ளீடற்ற தன்மையை, ரத்தபுஷ்பம், ரத்த முலாம், மயானம், நாக்கு, அடிநாள், சொப்பனம் முதலான ஒரு டஜன் சொற்களை நம்பி எழுந்த இந்தக் கவிதைகளின் உண்மை உணர்வின்மையை, இன்னும் விரிவாகவும், மாற்றுக் கவிதைகளின் உதவியோடும் எழுதிக் காட்டமுடியும், ஆனால் அது வீண் வேலை. மேலும் அது ஒரு பாடம் சொல்வதாக முடியும்.

இந்தத் தொகுப்புகளில் காணப்படுவன வற்றைக் கவிதை என்று ராஜாராம் நினைப்பது போலவே வேறு சிலரும் நினைக்கலாம். அது எனக்கு வியப்பைத்தரவில்லை. ஏனென்றால்—

"To write prose, one must have something to say, but a man who has nothing to say can, ofcourse, compose verse and rhymes, for in these one word suggests the next and the final product though it is in fact nothing, nevertheless looks as if it were something" ●

---

# கண்டதும் கேட்டதும்

(ஆசிரியர்: ஜி. நாகராஜன். மீனாட்சி புத்தக நிலையம். மதுரை 1. விலை ரூ 3·00)

'கண்டதும் கேட்டதும்'—ஒரு சிறுகதைத் தொகுப்பு. சுமார் பத்தாண்டுகளாக எழுதிக் கொண்டுவரும் ஜி. நாகராஜனின் முதல் சிறுகதைத் தொகுப்பு. இத்தனை ஆண்டுகளில் இவ்வளவுதான் எழுதி இருப்பதாகத் தெரிகிறது. கொஞ்சமாக எழுதியும் அழுத்தமாகத் தனியாகப்பேர்குறிப்பிடும்படியாக எழுதியிருக்கிறார். ரொம்பவும் ஒதுக்கலான விஷயத்தைப் பற்றி—தான் ஒதுங்கி இருந்துகொண்டு நடப்புக்களாகவும் காட்சிகளாகவும் வரைந்து காட்டுகிறார். வாழ்க்கை இயல், இயல்பான மனோதத்துவம் கதைகளுக்குச் சிறப்புத் தருகிறது. கு. ப. ராஜகோபாலன் தனிமனிதர்களின் பிரச்சினையாகக் கையாண்ட விஷயங்களை, வாழ்க்கை முழுவதற்கும் இணைந்ததாகக் காட்டுவது இவருக்குச் சாத்தியமாகி இருக்கிறது. எதையும் பிரச்சினையாகக் காட்டாது வாழ்க்கையாகக் காட்டி இருப்பதை மிகவும் சிறப்பாகச் சொல்ல வேண்டும்.

ஜி. நாகராஜன் எழுத்துக்கள் என்னைப் பாதித்திருப்பதுஎனக்குத்தெரிகிறது கொஞ்சம் கூடுதலாகப் பாதித்திருப்பதை இத்தொகுதி ஊர்ஜிதப் படுத்துகிறது. எதுவும் தள்ளக் கூடியதல்ல, எழுதக் கூடாத வேண்டாத விஷயமல்ல. எதிலும் தான் கரைந்து போகாமல்—கசிந்து உருகாமல் மரபு என்பதற்காக—ஐதீகங்கள் என்பதற்காக வளைந்து கொடுக்காமல் இருப்பதை அங்கீகரிப்பது என்பதுதான் ஜி. நாகராஜனின் எழுத்தின் அடிப்படை. இதுதான் தமிழில் மிகவும் அரிதாகக் காணப்படும் அம்சம். பாவமும், பிராயச் சித்தமும், கைகாட்டியும், வழிகாட்டியும், உபதேசியும் தமிழ் எழுத்தில் நிறையவே உண்டு சிறுகதை நாவல் என்னும் ரூபங்களில். ஆனால், உண்மையைச் சொல்லும் எழுத்துக்கள் ரொம்பவும் கொஞ்சமே. அந்தக் கொஞ்சத்தில் இந்தக் கதைகள் அடங்குகின்றன.

இது ஒரு ரகம், தனி ரகம். கிருத்திகாவின் வாசவேஸ்ஸ்வரம் ரகம், காலம் கொண்டுவந்து தந்திருக்கும் வளர்ச்சியின் படிகள்; புதிய படிகள். போகப்போக பழக்கமாகலாம்.

தமிழ்ப் பத்திரிகைகள் கொண்டுவந்து தள்ளும் ஆபாசத்திலிருந்து முற்றிலும்மாறான கலைப் படிவங்கள் ஜி. நாகராஜனின் கதைகள் பச்சைக் கதைகளும்—சிவப்புக் கதைகளும் படித்துப் பழக்கமானவர்களுக்கு ஜி. நாகராஜன் முற்றிலும் மாறுபட்ட,-ஜீரணிக்க முடியாத எழுத்தாளராகஇருப்பதில்வியப்பொன்றுமில்லை; இப்படி இருப்பதுதான், அவரின் தனித் தன்மை என்று படுகிறது. இந்தத் தொகுப்பில் பதினொன்கு கதைகள். எல்லாக் கதைகளும் நன்றாக உருவாகி இருப்பதாக என்னால் சொல்ல முடியவில்லை. சில எனக்குத் திருப்தி தருகின்றன.

எங்கள் ஊர், யாரோ ஒரு முட்டாள் சொன்னகதை, பச்சக்குதிரை, தீராக்குறை—மிகவும் சிறப்பாக உருவாகி இருக்கின்றன. நளினமாக—கவிதைபோல வசனம் கதைகளுக்குச் சிறப்புத் தருகிறது.

மிஸ்.பாக்கியம் மனோதத்துவரீதியில் உருவாகித் தமிழ்ச் சினிமா மாதிரி ஒரு காட்சியுடன் முடிவடைகிறது. சாவு தன்னுடைய போக்கிற்குப்பரிகாரம் என நினைத்தாளா பாக்கியம்? மனம் குழம்பி சாவை ஏற்றுக் கொண்டாளா?—எப்படி அர்த்தப் படுத்திக் கொண்டாலும் அவள் சாவு ரொம்பவும் செயற்கையாக அமைந்துவிடுகிறது.

ஜி. நாகராஜன் என்னும் கலைஞனை—எழுத்தில் குறிப்பிடத்தக்க தனித் தன்மையும் தனிநோக்கும் கொண்ட சிறுகதை ஆசிரியனை தமிழ்மக்களுக்கு அறிமுகப்படுத்தும் தொகுப்பு 'கண்டதும் கேட்டதும்'

—சா. கந்தசாமி

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by